ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அருளிய

# பவானி புஜங்கம்

# தேவி அபராத க்ஷமாபண ஸ்தோத்ரம்

உரையாசிரியர் :

ஞானபாஸ்கர பண்டிட்

பி. என். நாராயண சாஸ்திரி



ஜோதி நிலையம்

श्रीः

॥ श्री शङ्करभगवत्पादविरचितम् ॥

# भवानीभुजङ्गम्

# देव्यपराधक्षमापणस्तोत्रं च

ஸ்ரீ சங்கரபகவத் பாதர் அருளிய

# பவானி புஜங்கம்

## தேவீ அபராதக்ஷமாபண ஸ்தோத்ரம்

இரண்டும் அடங்கியது.

உரையாசிரியர்

ஞானபாஸ்கர, பண்டிட்

பி. என். நாராயண சாஸ்திரி

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீசந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்ரீபாதாள் பீடாரோஹண

வைரவிழா வெளியீடு

பாமதிநூல்கள் 6 விலை 30 பைசா

---

வெளியிடுபவர்

ஏ. கே. ஜயராமன்

ஜோதி நிலயம்

சென்னை-18.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் ஸ்ரீ மடம்,
# காஞ்சீபுரம்

முகாம் : ப்ரோதத்தூர்
கடப்பை ஜில்லா

श्रीः

தேதி 20-1-67

பரமேச்வரனின் அவதாரமாக ஆவிர்பவித்து துர்மதங்களை கண்டித்து, அத்வைத தத்வத்தையும், ஷண்மதங்களையும் நிலை நிறுத்தி ஜனங்கள் கடைத்தேறுவதற்காக ப்ரகரண கிரந்தங்களையும், பல்வேறு பகவன் மூர்த்திகளைப் பற்றிய ஸ்தோத்ரங்களையும் இயற்றி மஹோபகாரம் செய்துள்ள ஸ்ரீ பகவத் பாதாசார்யாள் அனுக்ரஹித்துள்ள ஸ்தோத்ரங்களை தகுந்த வித்வான்களைக் கொண்டு தமிழில் மொழி பெயர்க்கச் செய்து, சென்னை ஆழ்வார்பேட்டை ஜோதி நிலயத்தின் மூலம் ஸ்ரீ ஜயராமன் வெளியிட ஆரம்பித்திருப்பதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

பக்தர்கள் இந்நூல்களின் மூலம் பொருளுணர்ந்து பகவன் மூர்த்திகளை பஜித்து எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

நாராயணஸ்ம்ருதி

# ஸ்ரீ ஆசார்யாளின் அருள்வாக்கு

## भवानि त्वं

ஈச்வரனும் அம்பாளும் சேர்ந்து ஒரு சரீரம். சக்தியும் சிவனும் ஒன்றுதான். சக்தி (Energy) சிவன் இருவரும் லோக க்ஷேமார்த்தம் அர்த்தநாரீசுவரத் திருக்கோலத்தோடு ஒரே பொருளாக விளங்குகிறார்கள்.

நாம் ஜன்மம் எடுத்தது எதற்காக ?

मानवजन्मन: किं फलम्

மானவஜன்மனஃ கிம் பலம் ?

ஜன்மம் எடுத்தது ஜன்மத்தைப் போக்கிக் கொள்ளத்தான்.

கோபத்தினாலே பல பாவங்களைச் செய்கிறோம். கோபத்திற்குக் காரணம், ஆசை, காமம். காரியத்தை ஒழிக்க வேண்டுமென்றால் முதலில், காமத்தை-ஆசையை ஒழிக்க வேண்டும். பற்றை ஒழித்து விட்டால் பாபம் செய்யாமல் இருக்கலாம்.

ஆசைக்குக் காரணம் என்ன ? நம்மைத் தவிர இன்னொன்று இருப்பதனாலே ஆசை வருகிறது.

ராகத்திற்கு மூலம்-த்விதீய விஷயம்.

நம்மிடம் நமக்கு ஆசை வராது. இரண்டாவது ஒன்று இருப்பதாக நினைக்கும்போதுதான் ஆசை வருகிறது. இரண்டு இருக்கிறது என்ற புத்தி இருப்பதற்குக் காரணம் மித்யா ஞானம். இந்தப் புத்தி போய்விட்டால் எல்லாம் ஒன்று என்ற தத்துவம் புரியும். வேதம் என்ன சொல்லுகிறது? " சாந்தமாகிய சிவமே இரண்டற்ற வஸ்துவாக எல்லாமாக இருக்கிறது. சிவ ஸ்வரூபந்தான் பரப்பிரம்மம் " (மாண்டூக்ய உபநிஷத்.) ஜன்மத்தின் பலனே ஜன்ம நிவிருத்திதான். ஜன்ம நிவிருத்திக்காகவே மனித ஜன்மம் வந்திருக்கிறது.

ஜன்ம நிவிருத்தி ஏற்பட வேண்டுமென்றால்-காரியங்கள்—பாவங்கள் செய்யக்கூடாது. பாவங்கள் செய்யாதிருக்கக் கோபம் கூடாது. கோபம் போகவேண்டுமானால் ஆசை போகவேண்டும். ஆசை போகவேண்டுமானால் வேறாகத் தெரிகிற வஸ்து இரண்டாவதாக இல்லை 'ஒன்றுதான்' என்ற உண்மை ஞானம் வந்தாகவேண்டும்.

இந்த அத்வைத சித்தாந்தத்தைத்தான் ஸ்ரீ சங்கராசாரியர் சொல்கிறார். நம்மைப் பெற்ற அம்மா உடம்புக்கு பால் கொடுப்பார். அறிவுக்கு ஞானப்பால் கொடுப்பவள் அம்பாள் தான். உண்மையான அறிவின் சொரூபமே அவள் தான். அவளுடைய சரணாரவிந்தத்தைப் பற்றிக் கொண்டு அவளுடைய ஸ்வரூபத்தோடு நம்மை நாம் கரைக்க வேண்டும். 'அம்மா, நான் உன் தாஸன்' என்று சொல்லிக் கொண்டு ஸ்தோத்திரம் ஆரம்பிக்கிறார்.

भवानि त्वं दासे मयि वितर दृष्टिं सकरुणा-
मिति स्तोतुं वाञ्छन् कथयति भवानि त्वमिति यः ।
तदैव त्वं तस्मै दिशसि निजसायुज्यपदवीं
मुकुन्दब्रह्मेन्द्रस्फुटमुकुटनीराजितपदाम् ॥

பவானி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணா-
மிதி ஸ்தோதும் வாஞ்சந் கதயதி பவானி த்வமிதி ய: ।
ததைவ த்வம் தஸ்மை திஶஸி நிஜஸாயுஜ்யபதவீம்
முகுந்த ப்ரஹ்மேந்த்ரஸ்புட முகுட நீராஜிதபதாம் ॥

'பவானி' என்பது அம்பாளுடைய நாமம். பவானி! நான் உன்னுடைய தாஸன். என்னிடத்தில் கருணை பண்ண வேணும். அந்தக் கருணை என்னிடம் உண்டாவதில் நான் என்ன ஆகிறேன்?' என்று சொல்ல ஆரம்பிக்கிறார்.

பவானி என்றால் ஆகிவிடுகிறேன் என்றும் அர்த்தம். எப்படி ஆகிவிடுகிறார்?

भवानि त्वं பவானி த்வம்

“நீயாகவே நான் ஆகிவிடுகிறேன். நான் என்னுடையது என்பதை உன்னிடத்தில் கரைத்து விடுகிறேன். நான் என்ற உணர்ச்சி போய், எனது என்ற உணர்ச்சி போய் உன்னிடத்தில் கலந்து விடுகிறபோது ஒரே பொருள் தான் இருக்கிறது. அது நீயே!”

இப்படி ஸ்தோத்திரம் பண்ணுகிறார். இந்த மாதிரி இரண்டாவது பொருள் இல்லாமல் எல்லாம் பரமாத்ம ஸ்வரூபத்தோடு ஒன்று பட்டால் அங்கே ராகம் இல்லை, கர்மம் இல்லை. ஜன்மம் போய் விடுகிறது. எல்லாம் ஒன்று என்ற ஞானம் வந்துவிட்டவர்களுக்கு, அம்பிகையின் கடாக்ஷத்தைப்பெற்று விட்டவர்களுக்கு எல்லாம் சமமான த்ருஷ்டியாகப் போய்விடும்.

शिव शिव पश्यन्ति समं श्रीकामाक्षीकटाक्षिताः पुरुषाः ।
विपिनं भवनममित्रं मित्रं लोष्टं च युवतिबिम्बोष्ठम् ॥

சிவசிவ பஶ்யந்தி ஸமம் ஸ்ரீகாமாக்ஷீ கடாக்ஷிதாஃ புருஷாஃ
விபிநம் பவநமமித்ரம் மித்ரம் லோஷ்டம் ச யுவதி
பிம்போஷ்டம்.

என்பது போல அவர்கள் எல்லாவற்றையும் ஒன்றாகப் பார்க்கிறார்கள். இப்படிப்பட்ட அநுபவம் உண்டாவதற்கு அம்பாளுடைய கடாக்ஷம் இருக்கவேண்டும். அவளுடைய சரணாரவிந்த தியானம் எப்போதும் இருக்கவேண்டும்.

## முன்னுரை

ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய இந்த பவானி புஜங்கம் மிகச் சிறந்தது. தாய் வடிவாய் கடவுளை வழிபட்டால் குற்றங்களைப் பொறுத்து பக்தர்களுக்கு அருள் கிடைக்கும். 'பவானி' என்ற அம்பாள் நாமத்தை சொன்ன உடனே (பவானி — ஆகிறேன்) Rootல் சொன்னபடி பவானியாகவே ஆய்விடுகிறன், என்று ஆசார்யாளே ஸௌந்தர்ய லஹரியில் சொல்லியிருக்கிறார்கள். அப்படிச் சிறந்த இந்தத் துதியை ஆசார்யாளின் அறுபதாவது பீடாரோஹண விழாவை கொண்டாட ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாளின் அறுபது ஸ்தோத்திர நூல்களை வெளியிடும் ஜோதி நிலைய அதிபர் ஸ்ரீ ஜயராமன் அவர்கள் தமிழ் உரை எழுதித்தருமாறு கேட்டுக் கொண்டார்கள். என் சிற்றறிவிற்கெட்டிய வரையில் எழுதியுள்ளேன். அன்பர்கள் குற்றம் நீக்கி குணம் கொள்ள வேண்டுகிறேன். நடமாடும் தெய்வமான ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் பரமாசார்யாள் சரணங்களில் என் கோடிக் கணக்கான வந்தனங்களை ஸமர்பித்துக் கொள்கிறேன்.

P. N. நாராயண சாஸ்திரி,

ஸ்ரீ ராம ஜயம்
ஐப்பசி 5 ...
அனந்த...

॥ श्रीः ॥

# भवानी भुजङ्गम्

## பவானி புஜங்கம்

षडाधारपङ्केरुहान्तर्विराजत्-
सुषुम्नान्तरालेऽतितेजोल्लसन्तीम् ।
सुधामण्डलं द्रावयन्तीं पिबन्तीं
सुधामूर्तिमीडे चिदानन्दरूपाम् ॥ १ ॥

ஷடாதார பங்கேருஹாந்தர் விராஜத்
ஸுஷும்நாந்தராளேऽதிதேஜோல்லஸந்தீம் |
ஸுதா மண்டலம் த்ராவயந்தீம் பிபந்தீம்
ஸுதா மூர்த்திமீடே சிதானந்த ரூபாம் || 1 ||

"மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்கிற ஆறு ஆதார சக்கரங்களிலும் பிரும்ம ரந்த்ரத்திலுள்ள ஸுஷும்னை என்னும் நாடியில் மிகவும் ஒளியோடு விளங்குகிறவளாயும், ஆயிரம் இதழ்கள் கொண்ட சக்ரத்திலிருந்துகொண்டு அம்ருதத்தை வழிந்தோடும்படி செய்துகொண்டும் அந்த அம்ருதத்தையே சாப்பிடுபவளாயும், அம்ருதமயமான உருவமுள்ளவளும், அறிவு, ஆனந்தமயமான ரூபத்தைப் பெற்ற அன்னைக் கடவுளை (பவானியை) வணங்குகிறேன்."

ஸ்வர்ண காந்தி
-ஜ் தீர்த்தம்



ज्वलत्कोटिबालार्कभासारुणाङ्गीं
सुलावण्यशृङ्गारशोभाभिरामाम् ।
महापद्मकिञ्जल्कमध्ये विराजत्-
त्रिकोणे निषण्णां भजे श्रीभवानीम् ॥ २ ॥

ஜ்வலத் கோடி பாலார்க்க பாஸாருணாங்கீம்
ஸுலாவண்ய ச்ருங்கார சோபாபிராமாம் |
மஹாபத்ம கிஞ்ஜல்க மத்யே விராஜத்
த்ரிகோணே நிஷண்ணாம் பஜே ஸ்ரீபவானீம் || 2 ||

"ஒளிவிடுகிற கோடிக்கணக்கான இளம் சூர்ய காந்தி போன்ற சிவந்த உடலையுடையவளும், மிக அழகான ச்ருங்கார காந்தியினால் (பக்தர்களை) மகிழ்ச்சியுறச் செய்கிறவளும், ஆயிரமிதழ் கொண்ட தாமரையின் மகரந்தத்தின் நடுவிலுள்ள ஒளிவிடுகிற முக்கோணத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீபவானியைத் தொழுகிறேன்"

क्वणत्किङ्किणीनूपुरोद्भासिरत्न-
प्रभालीढलाक्षार्द्रपादाब्जयुग्मम् ।
अजेशाच्युताद्यैः सुरैः सेव्यमानं
महादेवि मन्मूर्ध्नि ते भावयामि ॥ ३ ॥

க்வணத் கிங்கிணீ நூபுரோத்பாஸி ரத்ந
ப்ரபாலீட லாக்ஷார்த்ர பாதாப்ஜயுக்மம் |
அஜேசாச்யுதாத்யைঃ ஸுரைঃ ஸேவ்யமாநம்
மஹாதேவி மந்மூர்த்நி தே பாவயாமி || 3 ||

"ஒலிக்கிற மணிகளுடன் கூடிய ரத்தினத்திலான பாதஸரத்தின் ஒளியாலும், மிக அழகான ஈரமுள்ள செம் பஞ்சுக் குழம்பினால் பூசப்பட்டதும் அயன்-மால்-ஈசன், மற்றும் தேவர்களாலும் வணங்கப்படுவதுமான உன் இரு திருவடித் தாமரையை, ஹே, தாயே, என் முடியில் வைத்துத் தொழுகிறேன்."

सुशोणाम्बराबद्धनीवी विराजन्-
महारत्नकाञ्चीकलापं नितम्बम् ।
स्फुरद्दक्षिणावर्तनाभिं च तिस्रो
वलीरम्ब ते रोमराजिं भजेऽहम् ॥ ४ ॥

ஸுசோணாம்பராபத்த நீவீ விராஜன் —
மஹா ரத்ந காஞ்சீ கலாபம் நிதம்பம் ||
ஸ்புரத் தக்ஷிணாவர்த்த நாபிம் ச திஸ்ரோ
வலீரம்ப தே ரோமராஜிம் பஜேऽஹம் || 4 ||

"தாயே ! அழகான சிவப்பு பட்டாடையினுல் முடிந்து கட்டப்பட்டதும், சிறந்த ரத்னங்களால் ஆன ஒட்டியாணத்தினுல் அலங்கரிப்பட்ட உன் இடுப்பையும், பிரதக்ஷிணமாய்த் திரும்புகிற தொப்புளேயும், மூன்று வரிசையாயிருக்கும் ரோமங்களின் வரிசையோடு கூடிய உன்னே நான் வணங்குகிறேன்."

लसद्वृत्तमुत्तुङ्गमाणिक्यकुम्भो-
पमश्रि स्तनद्वन्द्वमम्बाम्बुजाक्षि ।
भजे दुग्धपूर्णाभिरामं तवेदं
महाहारदीप्तं सदा प्रस्नुतास्यम् ॥ ५ ॥

லஸத் வ்ருத்த முத்துங்க மாணிக்ய கும்போ —
—பமச்ரி ஸ்தனத்வந்த்வமம்பாம்புஜாக்ஷி |
பஜே துக்த பூர்ணாபிராமம் தவேதம்
மஹாஹாரதீப்தம் ஸதா ப்ரஸ்நுதாஸ்யம் || 5 ||

"தாமரையொத்த கண்களுடைய தாயே, மாணிக்க கும்பத்திற்கொப்பானதும், வட்டமாயும் பருத்தும் விளங்குவதும், ஞானமாகிய பால் நிறைந்ததும், உயர்ந்த பொன் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதுமான உன் இரண்டு ஸ்தன பாரங்களே எப்பொழுதும் வணங்குகிறேன்."

शिरीषप्रसूनोल्लसद्बाहुदण्डैः
ज्वलद्बाणकोदण्डपाशाङ्कुशैश्च ।
चलत्कङ्कणोदारकेयूरभूषो-
ज्ज्वलद्भिर्लसन्तीं भजे श्रीभवानीम् ॥ ६ ॥

சிரீஷ ப்ரஸூ நோல்லஸத்பாஹு தண்டைஃ
ஜ்வலத் பாண கோதண்ட பாசாங்குசைஸ்ச |
சலத்கங்கணோதார கேயூர பூஷோ
ஜ்வலத்பிர் லஸந்தீம் பஜே ஸ்ரீபவானீம் || 6 ||

"வாகைப் பூக்கள் போல் விளங்குவதும் ஒளி விடுகிற பாணம், வில், பாசம், அங்குசம் இவைகளால் அழகாய் விளங்குவதும் அசைகிற காப்புகளோடும், தோள்வளைகளால் அணி செய்யப்பட்டதுமான நான்கு கைகளை உடைய ஸ்ரீபவானியைத் தொழுகிறேன்."

शरत्पूर्णचन्द्रप्रभापूर्णबिम्बा-
धरस्मेरवक्त्रारविन्दां सुशान्ताम् ।
सुरत्नावलीहारताटङ्कशोभां
महासुप्रसन्नां भजे श्रीभवानीम् ॥ ७ ॥

சரத்பூர்ண சந்த்ர ப்ரபா பூர்ண பிம்பா—
—தரஸ்மேர வக்த்ராரவிந்தாம் ஸுசாந்தாம் |
ஸுரத்னவளீ ஹார தாடங்க சோபாம்
மஹா ஸுப்ரஸன்னம் பஜே ஸ்ரீபவானீம் || 7 ||

"சரத் காலத்திய பூர்ண சந்திரனுக்குக் கொப்பான புன் சிரிப்புத் தவழும் தாமரை மலர் போன்ற முகத்தையும் அமைதியோடு கூடியதும் உயர்ந்த ரத்னங்களாலான தொங்குகிற சிறு மாலையோடு கூடிய காதில் அணியப்பட்ட "தோடு" என்னும் அணியோடு சிறந்து தெளிவாய் விளங்குகிற ஸ்ரீபவானியைத் தொழுகிறேன்."

सुनासापुटं सुन्दरभ्रूललाटं
तवौष्ठश्रियं दानदक्षं कटाक्षम् ।
ललाटे लसद्गन्धकस्तूरिभूषं
स्फुरच्छ्रीमुखाम्भोजमीडेऽहमम्ब ॥ ८ ॥

ஸுநாஸாபுடம் ஸுந்தரப்ரூலலாடம்
தவௌஷ்டச்ரியம் தாநதக்ஷம் கடாக்ஷம் |
லலாடே லஸத்கந்த கஸ்தூரி பூஷம்
ஸ்புரச் ச்ரீமுகாம்போஜமீடேऽஹமம்ப || 8 ||

"தாயே! அழகான மூக்கு, மிகச் சிறந்த புருவங்கள் நெற்றி-ஐச்வர்யம் நிரம்பிய உதடுகள் பக்தர்களுக்கு இஷ்டத்தைக் கொடுக்கும் பார்வைகள் சந்தனத்தினுலும் கஸ்தூரிப் பொட்டினுலும் விளங்குகிற நெற்றியும் ஒளிவிடுகிற தாமரை மலருக் கொப்பான உன் முகத்தையும் துதிக்கிறேன்."

चलत्कुन्तलान्तर्भ्रमद्भृङ्गवृन्दं
घनस्निग्धधम्मिल्लभूषोज्ज्वलं ते ।
स्फुरन्मौलिमाणिक्यबद्धेन्दुरेखा
विलासोल्लसद्दिव्यमूर्धानमीडे ॥ ९ ॥

சலத் குந்தளாந்தர் ப்ரமத்ப்ருங்க ப்ருந்தம்
கனஸ்நிக்த தம்மில்ல பூஷோஜ்வலம் தே |
ஸ்புரன் மௌளி மாணிக்ய பத்தேந்துரேகா
விலாஸோல்லஸத் திவ்ய மூர்த்தானமீடே || 9 ||

"அசைகின்ற முன்னுச்சி மயிர்களோடும் சிறந்த புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதும் அடர்ந்து கறுத்து நீண்டு விளங்குகிற கேச பாரத்தோடு கூடியதும், மாணிக்க கிரீடமும் அதில் பதிக்கப்பட்ட சந்திர கலையோடு சிறந்து விளங்குகிற உன் தலையைத் துதிக்கிறேன்."

इति श्रीभवानि स्वरूपं तवेदं
प्रपञ्चात्परं चातिसूक्ष्मं प्रसन्नम् ।
स्फुरत्वम्ब डिम्भस्य मे हृत्सरोजे
सदा वाङ्मयं सर्वतेजोमयं च ॥ १० ॥

இதி ஸ்ரீபவானி ஸ்வரூபம் தவேதம்
ப்ரபஞ்சாத் பரம் சாதி ஸூக்ஷ்மம் ப்ரஸன்னம் ।
ஸ்புரத்வம்ப டிம்பஸ்ய மே ஹ்ருத்ஸரோஜே
ஸதா வாங்மயம் ஸர்வ தேஜோமயம் ச ॥ 10 ॥

"தாயே, இம்மாதிரியான பவானியின் உருவம் உலகத்திற்கு மேற்பட்டதும், ஸூக்ஷ்மமாயும், தெளிவாயும், ஒலி வடிவானதும், ஒளிவடிவானதுமான ரூபம், ஒன்றும் தெரியாதவனுன என் இதயத் தாமரையில் எப்பொழுதும் விளங்கட்டும்."

गणेशाभिमुख्याखिलैः शक्तिवृन्दै-
र्वृतां वै स्फुरच्चक्रराजोल्लसन्तीम् ।
परां राजराजेश्वरि त्रैपुरि त्वां
शिवाङ्कोपरिस्थां शिवां भावयामि ॥ ११ ॥

கணேசாபிமுக்யாகிலை: சக்தி ப்ருந்தை—
வ்ருதாம் வை ஸ்புரச்சக்ரராஜோல்லஸந்தீம் ।
பராம் ராஜ ராஜேச்வரி த்ரைபுரி த்வாம்
சிவாங்கோபரிஸ்தாம் சிவாம் பாவயாமி ॥ 11 ॥

"கணபதியை முன்னிட்டு, சக்திக் கூட்டங்களால் சூழப்பட்டவளும், சிறந்து விளங்குகிற ஸ்ரீ சக்ரத்தில் வீற்றிருப்பவளும், "பரா" என்று போற்றப்படுகிற ராஜ ராஜேச்வரியும், காமேச்வரரின் மடியில் உட்கார்ந்திருப்பவளுமான மங்கள ரூபியும், த்ரிபுரை யென்று பெயர் பெற்றவளுமான உன்னை த்யானிக்கிறேன்."

குறிப்பு :— கணேசர், நவாவரண தேவதைகள் சூழ உயர்ந்த ஸ்ரீ சக்ரத்தின் பிந்துஸ்தானத்தில் காமேச்வரரின் மடியில் இருக்கும் த்ரிபுரஸுந்தரி ராஜ ராஜேச்வரியாகிய அம்பாளை இங்கு கூறுகிறார்.

त्वमर्कस्त्वमिन्दुस्त्वमग्निस्त्वमाप-
स्त्वमाकाशभूर्वायवस्त्वं महत्त्वम् ।
त्वदन्यो न कश्चित्प्रपञ्चोऽस्ति सर्वं
त्वमानन्दसंवित्स्वरूपां भजेऽहम् ॥ १२ ॥

த்வமர்க்க ஸ்த்வமிந்து ஸ்த்வமக்னிஸ்த்வமாப —
ஸ்த்வமாகாச பூ வாயவஸ்த்வம் மஹத்வம் ।
த்வதந்யோ ந கஸ்சித் ப்ரபஞ்சோऽஸ்தி ஸர்வம்
த்வமானந்த ஸம்வித் ஸ்வரூபாம் பஜேऽஹம் ॥ 12 ॥

"சூரியன், சந்திரன், அக்னி, ஜலம், ஆகாசம், பூமி, வாயு, மஹத், எல்லாம் நீயே. உன்னைக் காட்டிலும் வேருன உலகம் ஒன்றுமில்லை. அறிவு, ஆனந்தமேயான, அன்னையை நான் தொழுகிறேன்."

श्रुतीनामगम्ये सुवेदागमज्ञा
महिम्नो न जानन्ति पारं तवाम्ब ।
स्तुतिं कर्तुमिच्छामि ते त्वं भवानि
क्षमस्वेदमत्र प्रमुग्धः किलाहम् ॥ १३ ॥

ச்ருதீநாமகம்யே ஸுவேதாகமக்ஞா
மஹிம்நோ ந ஜாநந்தி பாரம் தவாம்ப ।
ஸ்துதிம் கர்த்துமிச்சாமி தே த்வம் பவானி
க்ஷமஸ்வேத மத்ர ப்ரமுக்தஃ கிலாஹம் ॥ 13 ॥

"தாயே! மறைகளாலும் அடைய முடியாதவளே! மறைகள், ஆகமங்கள் இவைகளைக் கற்றவர்களும் உன் பெருமையை நன்கு அறிய முடியாதவர்களாய் இருக்கிருர்கள். ஹே! பவானி மிகவும் மூடனுன நான் உன்னைத் துதிக்க ஆசைப்படுகிறேன். இதை நீ பொறுத்துக்கொள்ள வேண்டும்."

**गुरुस्त्वं शिवस्त्वं च शक्तिस्त्वमेव**
**त्वमेवासि माता पिता च त्वमेव ।**
**त्वमेवासि विद्या त्वमेवासि बन्धु-**
**र्गतिर्मे मतिर्देवि सर्वं त्वमेव ॥ १४ ॥**

குருஸ்த்வம் சிவஸ்த்வம் ச சக்திஸ்த்வமேவ
த்வமேவாஸி மாதா பிதா ச த்வமேவ।
த்வமேவாஸி வித்யா த்வமேவாஸி பந்து:
கதிர்மே மதிர்தேவி ஸர்வம் த்வமேவ ॥ 14 ॥

"குரு, சிவன், சக்தி, தாய், தகப்பன், வித்யை, உறவினர் எல்லாம் நீயே; நான் அடைய வேண்டிய வஸ்துவும் நீயே என்று அம்பாளிடத்தில் தன்னை ஆசார்யாள் அர்ப்பணம் செய்து கொள்கிறார்."

**शरण्ये वरेण्ये सुकारुण्यमूर्ते**
**हिरण्योदराद्यैरगण्ये सुपुण्ये ।**
**भवारण्यभीतेश्च मां पाहि भद्रे**
**नमस्ते नमस्ते नमस्ते भवानि ॥ १५ ॥**

சரண்யே வரேண்யே ஸுகாருண்ய மூர்த்தே
ஹிரண்யோதராத்யைரகண்யே ஸுபுண்யே।
பவாரண்யபீதேஸ்ச மாம் பாஹி பத்ரே
நமஸ்தே நமஸ்தே நமஸ்தே பவானி ॥ 15 ॥

"பவானி, தாயே, அண்டினவர்களைக் காப்பவளே! மிகுந்த கருணைவடிவானவளே; நான்முகன் முதலிய தேவர்களாலும் எண்ணிப் பார்க்கமுடியாதவளே! புண்யமே உருவானவளே! பிறவி என்னும் காட்டிற்குப் பயந்த என்னைக் காப்பாயாக. உனக்கு வணக்கம்! வணக்கம்! வணக்கம்!

इतीमां महच्छ्रीभवानीभुजंगं
स्तुतिं यः पठेद्भक्तियुक्तश्च तस्मै ।
स्वकीयं पदं शाश्वतं वेदसारं
श्रियं चाष्टसिद्धिं भवानी ददाति ॥ १६ ॥

இதீமாம் மஹச்ச்ரீபவானீ புஜங்கம்
ஸ்துதிம் ய : படேத் பக்தியுக்தஸ்ச தஸ்மை|
ஸ்வகீயம் பதம் சாச்வதம் வேதஸாரம்
ச்ரியம் சாஷ்டஸித்திம் பவானீ ததாதி || 16 ||

“ இம்மாதிரியான, உயர்ந்ததும், ஐச்வர்யத்தை வழங்குவதுமான ‘பவானி புஜங்கம்’ என்னும் துதியைப் பக்தியுடன் எவன் படிக்கிருனே அவனுக்கு மறையின் உட்பொருளாயும் அழிவற்றதுமான தன் ஸ்தானத்தையும், அஷ்ட ஸித்திகளுடன் கூடிய திரண்ட செல்வத்தையும் பவானி தேவி கொடுத்தருள்புரிகிருள். ”

भवानी भवानी भवानी त्रिवार-
मुदारं मुदा सर्वदा ये भजन्ति ।
न शोकं न मोहं न पापं न भीतिः
कदाचित्कथंचित्कुतश्चिज्जनानाम् ॥ १७ ॥

பவானீ, பவானீ, பவானீ, த்ரிவார —
—முதாரம் முதா ஸர்வதா யே பஜந்தி|
ந சோகம் ந மோஹம் ந பாபம் ந பீதி :
கதாசித் கதஞ்சித் குதஸ்சித் ஜனனும் || 17 ||

“ பவானி, பவானி, பவானி, என்று மும்முறை உரத்தக் குரலோடு, மகிழ்ச்சியுடன் எப்பொழுதும் எவர்கள் தொழுகிருர்களோ அந்த ஜனங்களுக்கு மனத்திலுள்ள துயரம், அறியாமை, பிரவமூட்டை, பயம், எப்பொழுதும் எந்த இடத்திலும் எவ்விதத்திலும் உண்டாகமாட்டாது.”

भवानी भुजंगं संपूर्णम्

பவானி புஜங்கம் ஸம்பூர்ணம்.

॥ श्री शङ्करभगवत्पादविरचितम् ॥

# देव्यपराधक्षमापणस्तोत्रम्

ஸ்ரீ சங்கரபகவத்பாதர்

அருளிய

# தேவி அபராதக்ஷமாபண ஸ்தோத்ரம்

உரையாசிரியர்

ஞானபாஸ்கர பண்டிட்

பி. என். நாராயண சாஸ்திரி

# முன்னுரை

ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய இந்த ஸ்தோத்திரம் மிகச் சிறந்தது. மகனிடம் அன்பில்லாத தாய் இருக்க முடியாது. பகவானின் கருணையைப் பற்றிக் கூறும்போது அன்னையினும் தயையுடையாய் என்று பக்தர்கள் பாடுவதிலிருந்தே அன்னையின் பெருமை விளங்கும். மனிதப் பிறவிக்குக் காரணமான இந்தத் தாய்க்கே இந்தப் பெருமையானல், பிறப்பற்று அகில உலகிலுள்ள எல்லா உயிர்களுக்கும் தாயான ஸ்ரீ அம்பாளுடைய கருணைக்குக் கேட்கவா வேண்டும். அப்படிச் சிறந்த அம்பிகையினிடத்தில் தன் குற்றங்களை எல்லாம் முறையிட்டு அடி பணிந்தால் குற்றத்தை மன்னித்து ஜீவராசிகளுக்கு வேண்டிய அனைத்தையும் கொடுத்து அருள்வாள். இதைத் தவிர வேறு உயரிய வழி ஒன்றுமில்லை என்பதையே ஆசார்யாள் கூறுகிறுர்கள். ஸ்ரீ ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப் பெற்று இன்று வரை சுமார் 2,300 வருஷ காலமாக இடையருது தொடர்ந்து வரும் காஞ்சி காமகோடி பீடத்தில் 68-வது ஆசார்யாளாய் விளங்கும் ஸ்ரீமத் சங்கராசார்ய சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ பாதர்கள் பட்டமேற்று 60 ஆண்டு பூர்த்தியை யொட்டி வெளியாகும் இத்துதி நூல்களின் வரிசையில் ஒன்ருன இதையும் படித்து குற்றம் நீக்கி குணம் கொண்டு பயன் அடைய வேண்டுகிறேன். இதை எழுத வாய்ப்புக் கொடுத்த ஜோதி நிலைய அதிபர் ஸ்ரீ ஜயராமனுக்கு எனது ஆசியையும் என் நன்றியையும் கூறுகிறேன்.

**P. N. நாராயண சாஸ்திரி.**

श्रीः

# देव्यपराधक्षमापणस्तोत्रम्

# தேவீ அபராத க்ஷமாபண ஸ்தோத்ரம்

न मन्त्रं नो यन्त्रं तदपि च न जाने स्तुतिमहो
न चाह्वानं ध्यानं तदपि च न जाने स्तुतिकथाः ।
न जाने मुद्रास्ते तदपि च न जाने विलपनं
परं जाने मातस्त्वदनुसरणं क्लेशहरणम् ॥ १ ॥

ந மந்த்ரம் நோ யந்த்ரம் ததபி ச ந ஜாநே ஸ்துதிமஹோ
ந சாஹ்வாநம் த்யாநம் ததபி ச ந ஜாநே ஸ்துதிகதா:।
ந ஜாநே முத்ராஸ்தே ததபி ச ந ஜாநே விலபநம்
பரம் ஜாநே மாத: த்வதநுஸரணம் க்லேசஹரணம் ॥ 1 ॥

“மந்த்ரம், யந்த்ரம், ஸ்துதி, அழைத்தல், தியானித்தல், கதை, முத்திரைகள் ஒன்றும் எனக்குத் தெரியாது. தாயே! உன்னிடம் முறையிடுவது ஒன்றே எனக்குத் தெரியும். அதுவே எல்லாத் துயரங்களையும் போக்கிவிடும்.”

विधेरज्ञानेन द्रविणविरहेणालसतया
विधेयाशक्यत्वात्तव चरणयोर्या च्युतिरभूत् ।
तदेतत् क्षन्तव्यं जननि सकलोद्धारिणि शिवे
कुपुत्रो जायेत क्वचिदपि कुमाता न भवति ॥ २ ॥

விதேரஜ்ஞாநேந த்ரவிண விரஹேணாலஸதயா
விதேயாசக்யத்வாத் தவ சரணயோர் யா ச்யுதிரபூத்।
ததேதத் க்ஷந்தவ்யம் ஜநநி ஸகலோத்தாரிணி சிவே
குபுத்ரோ ஜாயேத க்வசிதபி குமாதா ந பவதி ॥ 2 ॥

“தைவ வசத்தினால் அறியாமையாலும், செல்வமற்றவனாயிருப்பதாலும், சோம்பலினாலும், செய்ய முடியாததாலும் உன் திருவடியைத் தொழுவதிலிருந்து நழுவி விட்டேன். எல்லா ஜீவர்களையும் தூக்கி விடுகிற மங்கள உருவமான தாயே, இந்த என் தவறை நீ பொறுத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், குண மற்ற பிள்ளையிருக்கக்கூடும். குழந்தையினிடம் அன்பில்லாத தாய் இருக்க முடியாது.”

पृथिव्यां पुत्रास्ते जननि बहवः सन्ति सरलाः
परं तेषां मध्ये विरलतरलोऽहं तव सुतः ।
मदीयोऽयं त्यागः समुचितमिदं नो तव शिवे
कुपुत्रो जायेत क्वचिदपि कुमाता न भवति ॥ ३ ॥

ப்ருதிவ்யாம் புத்ராஸ்தே ஜனனி பஹவ : ஸந்தி ஸரளாஃ
பரம் தேஷாம் மத்யே விரள தரளோ஽ஹம் தவ ஸுதஃ
மதீயோ஽யம் த்யாக : ஸமுசிதமிதம் நோ தவ சிவே
குபுத்ரோ ஜாயேத க்வசிதபி குமாதா ந பவதி || 3 ||

"இப்புவியில், உனக்கு நிறைய பிள்ளைகள் இருக்கின்றனர் தாயே. அவர்களுள் வெகு தூரத்திலுள்ள நானும் உன் மகனே. என்னை விட்டுவிடாமல் காப்பாற்றுவாயாக. குணமற்ற பிள்ளை இருப்பான். அன்பில்லாத தாய் இருக்கமாட்டாள்."

जगन्मातर्मातस्तव चरणसेवा न रचिता
न वा दत्तं देवि द्रविणमपि भूयस्तव मया ।
तथापि त्वं स्नेहं मयि निरुपमं यत्प्रकुरुषे
कुपुत्रो जायेत क्वचिदपि कुमाता न भवति ॥ ४ ॥

ஜகன்மாதர் மாதஸ்தவ சரணஸேவா ந ரசிதா
ந வா தத்தம் தேவி த்ரவிணமபி பூயஸ்தவ மயா|
ததாபி த்வம் ஸ்நேஹம் மயி நிருபமம் யத் ப்ரகுருஷே
குபுத்ரோ ஜாயேத க்வசிதபி குமாதா ந பவதி || 4 ||

"உலகத்திற்கெல்லாம் தாயான அம்மையே, உன் திருவடிகளுக்கு நான் ஸேவை செய்யவில்லை. என்றால் ஒரு வஸ்துவும் கொடுக்கப்படவில்லை. அப்படியிருந்த போதிலும் என்னிடத்தில் நீ நிகரற்ற அன்பைக் காட்டுகிறுய். ஏனெனில் குற்றமுள்ள பிள்ளை இருக்கக்கூடும்; அன்பற்ற தாய் இருக்கமாட்டாள்."

परित्यक्ता देवा विविधविधसेवाकुलतया
मया पञ्चाशीतेरधिकमपनीते तु वयसि ।
इदानीं चेन्मातस्तव यदि कृपा नापि भविता
निरालम्बो लम्बोदरजननि कं यामि शरणम् ॥ ५ ॥

பரித்யக்தா தேவா விவித வித ஸேவாகுலதயா
மயா பஞ்சாசீதே ரதிகமபநீதே து வயஸி।
இதாநீம் சேன்மாதஸ்தவ யதி க்ருபா நாபி பவிதா
நிராலம்போலம்போதர ஜனனி கம் யாமி சரணம்

" குடும்பத்தைக் காப்பதன் பொருட்டு, பல பல, வேலைகளில் ஈடுபட்டு தெய்வ வழிபாட்டை விட்டுவிட்டேன். வயது முதிர்ந்த இந்த ஸமயத்தில், தாயே, உன் கருணை எனக்கு கிடைக்காவிட்டால் என்ன செய்வேன். விநாயகனைப் பெற்ற தாயே, ஆதரவற்றவனை நான் யாரை ஆதரவாய் அடைவேன் " (உன்னைத்தவிர வேறு யாருமில்லை என்பது கருத்து.)

श्वपाको जल्पाको भवति मधुपाकोपमगिरा
निरातङ्को रङ्को विहरति चिरं कोटिकनकैः ।
तवापर्णे कर्णे विशति मनुवर्णे फलमिदं
जनः को जानीते जननि जपनीयं जपविधौ ॥ ६ ॥

ச்வபாகோ ஜல்பாகோ பவதி மதுபாகோபமகிரா
நிராதங்கோ ரங்கோ விஹரதி சிரம் கோடிகநகை:।
தவாபர்ணே கர்ணே விசதி மநுவர்ணே பலமிதம்
ஜந:கோ ஜாநீதே ஜனனி ஜபநீயம் ஜபவிதௌ ‖ 6 ‖

"மனிதன் கீழான தொழிலைச் செய்பவனாயினும், தேனினுமினிய குரலுடையவனாயும், துயர் நீங்கி ஸபையில் செல்வத்துடன் விளங்குகிறான். அபர்ணையே! உன் பதினைந்து எழுத்துக்கொண்ட மந்திரம் காதில் விழுந்த உடனே மேற் சொன்ன சிறப்பான பயனை அடைகிறான். தாயே! முறைப்படி ஜபம் செய்பவனுக்கு எதுதான் கிடைக்காது?" (எல்லாம் கிடைக்குமென்பது கருத்து.)

चिताभस्मालेपो गरलमशनं दिक्पटधरो
जटाधारी कण्ठे भुजगपतिहारी पशुपतिः ।
कपाली भूतेशो भजति जगदीशैकपदवीं
भवानि त्वत्पाणिग्रहणपरिपाटीफलमिदम् ॥ ७ ॥

சிதாபஸ்மாலேபோ கரளமசநம் திக்படதரோ
ஜடாதாரீ கண்டே புஜகபதிஹாரீ பசுபதி: ।
கபாலீ பூதேசோ பஜதி ஜகதீசைகபதவீம்
பவானி த்வத் பாணிக்ரஹணபரிபாடீ பலமிதம் ॥ 6 ॥

"பவானி, தாயே, மயானச் சாம்பலைப் பூசியவரும் விஷத்தைச் சாப்பிட்டவரும், திசைகளை வஸ்திரமாக உடையவரும், ஜடைமுடியுடையவரும், பாம்புகளைக் கழுத்தில் மாலையாய்ப் போட்டுக் கொண்டிருப்பவரும், ஜீவர்களுக்குத் தலைவரும், கையில் ஓட்டை வைத்துக் கொண்டிருப்பவரும், பூதக்கூட்டங்களுக்குத் தலைவருமான பரமேச்வரர், உன்னைக் கைப்பிடித்துத் திருமணம் செய்து கொண்ட பெருமையினால் அல்லவோ உலகம் முழுவதற்கும் பிரபுவாயிருக்கும் தன்மையை அடைகிறார்."

न मोक्षस्याकाङ्क्षा भवविभव वाञ्छापि च न मे
न विज्ञानापेक्षा शशिमुखि सुखेच्छापि न पुनः ।
अतस्त्वां संयाचे जननि जननं यातु मम वै
मृडानी रुद्राणी शिव शिव भवानीति जपतः ॥ ८ ॥

ந மோக்ஷஸ்யாऽகாங்க்ஷா பவவிபவ வாஞ்சாபி ச ந மே
நவிக்ஞானபேக்ஷா சசிமுகி ஸுகேச்சாபிந புந:।
அதஸ்த்வாம் ஸம்யாசே ஜனனி ஜனனம் யாது மம வை
ம்ருடானீ ருத்ராணீ சிவசிவ பவானீதி ஜபத: ॥ 8 ॥

"சந்திரனுக் கொப்பான முகமுடைய தாயே, வீடும் (மோக்ஷம்) பிறந்துயர்ந்திருக்கும் எண்ணமும், விக்ஞானமும், இன்புற்றிருக்கவேண்டும் என்னும் ஆசையும் எனக்கு இல்லை. ஆகையால் சிவ சிவ, ம்ருடானி, ருத்ராணீ, பவானி, என்று ஜபிக்கும் ஒருவரிடம் பிறப்பை அடையவேண்டுமென்றே உன்னை வேண்டுகிறேன்."

**नाराधितासि विधिना विविधोपचारैः**
**किं रूक्षचिन्तनपरैर्न कृतं वचोभिः ।**
**श्यामे त्वमेव यदि किञ्चन मय्यनाथे**
**धत्से कृपामुचितमम्ब परं तवैव ॥ ९ ॥**

நாராதிதாஸி விதிநா விவிதோபசாரை:
கிம் ரூக்ஷசிந்தனபரைர் நக்ருதம் வசோபி: ।
ச்யாமே த்வமேவ யதி கிஞ்சந மய்யனாதே
தத்ஸே க்ருபாமுசிதமம்ப பரம் தவைவ ॥ 9 ॥

"ச்யாமளே! மந்திர சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட உபசாரங்களை முறைப்படி நான் செய்யவில்லை. சிந்தனையோடு கூடிய வார்த்தைகளாலும் ஒன்றும் செய்யவில்லை. தாயே! ஆதாரமற்றிருக்கும் என்னிடம் அருள் புரிவது, உனக்கே பொருத்தமானது."

குறிப்பு :— நாதியற்றவர்களுக்கு கருணை செய்வதில் அம்பாளுக்கு நிகர் எவெருமில்லை.

**आपत्सु मग्नः स्मरणं त्वदीयं**
**करोमि दुर्गे करुणार्णवेशि ।**
**नैतच्छठत्वं मम भावयेथाः**
**क्षुधातृषार्ता जननीं स्मरन्ति ॥ १० ॥**

ஆபத்ஸு மக்ந: ஸ்மரணம் த்வதீயம்
கரோமி துர்க்கே கருணார்ணவேசி ।
நைதச் சடத்வம் மம பாவயேதா:
க்ஷுதா த்ருஷார்த்தா ஜனனீம் ஸ்மரந்தி ॥ 10 ॥

"கருணைக் கடலான, மங்களரூபியான துர்க்கா தேவியே, நிறைந்த ஆபத்துகளில் ஆழ்ந்து உன்னை நினைக்கிறேன். என்னுடைய இந்த எண்ணத்தை தவருனது என்று எண்ணுதே. ஏனென்ருல், பசியாலும் தாகத்தாலும பீடிக்கப்பட்ட குழந்தைகள் தாயையே நினைப்பார்கள்."

जगदम्ब विचित्रमत्र किं
परिपूर्णा करुणाऽस्ति चेन्मयि ।
अपराधपरम्परावृतं
न हि माता समुपेक्षते सुतम् ॥ ११ ॥

ஜகதம்ப விசித்ரமத்ர கிம்
பரிபூர்ணா கருணாऽஸ்தி சேன்மயி ।
அபராதபரம்பராவ்ருதம்
ந ஹி மாதா ஸமுபேக்ஷதே ஸுதம் ॥ 11 ॥

"உலகத்திற்கெல்லாம் தாயே! என்னிடத்தில் குறையாத கருணையை நீ காட்டுவது ஆச்சரியமில்லை. ஏராளமான குற்றம் செய்திருந்தாலும், தாய் மகனைக் கைவிடுவதில்லை."

मत्समः पातकी नास्ति पापघ्नी त्वत्समा न हि ।
एवं ज्ञात्वा महादेवि यथायोग्यं तथा कुरु ॥ १२ ॥

மத்ஸம: பாதகீ நாஸ்தி பாபக்னீ த்வத்ஸமா ந ஹி ।
ஏவம் ஞாத்வா மஹாதேவி யதா யோக்யம் ததா குரு ॥
॥ 12 ॥

"என்னைப்போல் குற்றம் செய்தவர் யாருமில்லை. பாவத்தைப் போக்கடிப்பதில் உனக்கு நிகர் யாருமில்லை. மஹாதேவியே, இவ்வாறு அறிந்து எனக்குத்தக்கபடி அருள் புரிவாயாக!"

தேவி அபராதக்ஷமாபண ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்

---

பாரதி விஜயம் ப்ரெஸ், திருவல்லிக்கேணி, மதருஸ்-5.